உ

சிவமயம்.

திருநெல்வேலி அறச்சாலை

தமிழாகர முனிவர் அருளிய

# ஞானசம்பந்த குருராய வட்டகமும், சந்திரகலாமாலையும்.

---

இவை

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்து

மடாலயத்தாபகராகிய

ஸ்ரீமத் குருஞானசம்பந்த தேசிக சுவாமிகள்மீது

இயற்றி அருளப்பட்டு

ஷை ஆதீனத்துப் பரமாசாரிய சுவாமிகளாகிய

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி

ஸ்ரீகாழி. வித்வான்

ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை

அவர்களால்

---

சென்னை இம்பீரியல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1930

இஃது திருத்தருமபுர ஆதீனத்து 23-வது மஹா ஸந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் அவர்களுக்கு உ ரி மை செ ய் ய ப் பட்டது.

குருபாதம்

# முகவுரை.

இவ்விரண்டு நூற்களும் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுரவாதீனம் பிரதமாசாரியமூர்த்திகளாகிய ஆதி ஸ்ரீமத் குரு ஞானசம்பந்த தேசிக சுவாமிகளின்பேரில் தமிழாகர முனிவர் அருளியவை.

இத்தமிழாகார முனிவர், மேற்படி யாதீனம் ஆறுவது குருமூர்த்தியாகிய ஸ்ரீமத் திருஞான சம்பந்த தேசிக சுவாமிகள் தக்ஷிண தேசத்திலுள்ள சிவஸ்தல யாத்திரை செய்துகொண்டு திருநெல்வேலியிலுள்ள மெய்யன்பர்களாகிய அநேக சைவப் பிரபுகளுக்குச் சிவஞானோபதேசஞ் செய்தருளிச் சிந்துபூந்துறை மடாலயத்தின் கண்ணே யெழுந்தருளியிராநின்ற காலத்தில், சகல வேதாகம சாஸ்திரார்த்த சாரமாய் விளங்கா நின்ற சுத்தாத்துவித சைவ சித்தாந்த சிவஞான பானுவாய் விளங்கித் தம்மை யடைந்து பணிந்

திரந்துருகும் பக்குவிகளாகிய மெய்யன்பர்களுக்குச் சித்தாந்த சிவஞானோபதேசஞ்செய்து மும்மலப்பிணியு நீத்துச் சுத்தாத்துவித முத்திப்பெரும்பேறளித்தாண்டருளாநின்ற அவர்தம் திருவருண் மகிமாதிசயங்கள் யாவும் பல மெய்யன்பர்களாலும் கேட்டானந்த முற்றவராய்த் தாமும் அவ்வாறே சிவஞானோபதேசம்பெற்றுச் செனன மாணப்பிணி தீர்ந்துய்யும் பெரு விருப்புடையராய்க் காந்தங்கண்ட இரும்புபோல விரைவில் மேற்கூறிய திருஞானசம்பந்த தேசிக சுவாமிகள் சந்நிதானத்தை யடைந்து பணிந்திரந்து பிரார்த்திக்க. சுவாமிகள் கருணைபாலித்து அணுக்கத்தொண்டரிடம் ஆச்சிரமம்பெறச்செய்து பின்னர், திருவருளாற் றிருநோக்க முதலாகிய எழுவகைத் தீக்ஷைகளும் சிவஞானோபதேசமுஞ் செய்யப்பெற்றுப் பேரானந்தமுற்ற ஒரு பெரிய புலவர் சிகாமணி. இம்முனிவருடைய அதிநுட்பமாகிய செந்தமிழ்க் கல்வியின் றிறமையும் செய்யுளியற்றிப் பெருநூல் செய்யத்தக்க கற்பனா சாமர்த்தியமும் கண்டுணர்ந்து வியப்புற்று, பரமாசாரியராலும், கல்வி கேள்விகளிலும் சுவானுபூதிகத்தி

'ஷும் நிறைந்த திருக்கூட்டத் தம்பிரான்களா லும், செந்தமிழ் வித்வான்களாலும் நிறைந்த பெருஞ் சபையிலே தமிழாகரப் பெருமா ளென்று பலரு மறிந்துய்யப் பெயர் சூட்டப்பட்ட படியினாலேதான் இவர் அத்தமி ழாகாரனென்னும் பெயரையே முக்கியப்பெய ராகக்கொண்டு விளங்கினரென்றும், இன்னும் இவர் திருநெல்வேலிச் சிவாலயத்தின்கணெழுந் தருளியிராநின்ற நெல்லையப்பர்மேல் நெல்லையப் பர் நான்மணிமாலை 1, நெல்லை காவலமாலை 2, திருப்பணிமாலை 3, கலைமகளிரட்டைமணிமாலை 4, நீதிசார முதலாகிய பல பிரபந்தங்களையும் ஆகம சாரமாகிய ஆசௌசதீபிகை முதலாகிய விதிவிலக் குணர்த்தாநின்ற பல சாஸ்திரங்களையும் இயற்றிய ருளினரென்றும் இவரருளிய குருராயமாலைமுதற் பாட்டிலும் இரண்டாம்பாட்டினு மிருந்து நன் ருய்த்தெரிய வருகிறது. ஆசௌசதீபிகையென் பதில் வருணாசிரமங்களுக் கேற்பட்ட ஆசௌச முதலாகியவைகளைப் பல சிவாகமப் பிரமாணங்க ளாலே யாவரும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல நன்ருயறிந்துய்யுமாறு சுருங்கச்சொல்லல் விளங்க

வைத்தலென்னும் பேரழகு பொருந்தி விளங்கு மாறு செவ்வனே யியற்றியிருக்கின்றார். இவ்வரு மையான நூல் யாழ்ப்பாணம் ஸ்ரீ ஆறுமுகநாவல ரவர்களின் மாணாக்கரும் வண்ணார்பண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலை முதலுபாத்தியாய ருமாகிய மா. வைத்தியலிங்கம் பிள்ளையவர்களாற் பரிசோதிக்கப்பட்டு யாழ்ப்பாணம் சைவப்பிரகாச வித்தியாசாலையின்கண் (கி. பி. 1882 வருஷம்) சித்திரபானுவருஷ வைகாசிமாதத்தில் யாவரு முணர்ந்துய்யுமாறு அச்சிற் பதிப்பிக்கப்பட்டு வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. இதனைத் தவிர மற்ற நூல்கள் வெளிப்படவில்லை; நமக்குக் கிடைக்கவுமில்லை; கிடைப்பின் இந்நூல்களையும் சீக்கிரம் அச்சியற்றி வெளிப்படுத்த வேண்டு மென்று விருப்பம்.

இது சண்முகத்தம்பிரானெழுதிவைத்திருந்த ஒரு குறிப்பிலிருந்து தெரிய வந்தது.

இந்நூல்களை இனிதின் ஓதுவார் இகபரசாத னங்களைப்பெற்றுத், திருவருட்குரியராதல் திண்ணமாதலின், அன்னார் மெய்ப்பயன்கருதி, திருக்

கயிலாயபாரம்பரைத் தருமபுர ஆதீனத்து மஹா ஸந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் கட்டளையின்படி இவற்றைப் பிரசுரிக்கத் துணிந்தனன். சுபம்.

ஸ்ரீகாழி
20-1-1930 } ப. அ. முத்துத்தாண்டவராயன்

குருபாதந்துணை

திருத்தருமபுர ஆதீனப் பிரதம ஞானாசாரியராகிய

ஸ்ரீமத் குருஞானசம்பந்த சுவாமிகள்மேல்

திருநெல்வேலி அறச்சாலை மடபதியாகிய

ஸ்ரீ தமிழாகர முனிவயரிற்றிய

# ஸ்ரீ ஞானசம்பந்த குருராய வட்டகம்.

---

போர்கொண்ட மழைமதக் கலுழிபொழி கடவுள்வரைப்
புடைபிளிறு பிடியொ டுலவும்
பொதியமலை முனியால் வளம்பெறுந் தெக்ஷிண
பூமிக் கெழுந்தருளு நாள்
ஏர்கொண்ட நெல்லையம் பதியறச் சாலைமட
மீடேறவந் தெனக் கோர்
எழுவகைத் தீக்ஷையைச் சொக்கநாதன் றிருமு
னேபுரிந் தாட்கொண் டபின்
பேர்கொண்ட நாமச் செபஞ்செபித் திடுமுண்மை
பெற்றன னின்னரு ளினாற்
பெருமைபெறு நாவலர்கள்கொண்டாட வுலகினிற்
பேர்காப்பி டங்கள் செய்யுஞ்

சீர்கொண்ட தமிழா கான்சொல் விண்ணப்பந்
திருச்செவிச் சாற்றல் வேண்டுந்
திகழ்ஞான சம்பந்த னேகமலை யதிப்னே
சிவசமய குருரா யனே. 1

பைவாய் மணிச்சுடிகை யரவணிநெ லேசனிரு
பாதார விந்தத் திலன்
பானநான் மணிமலை நெல்லைகா வலமாலை
பகர்திருப் பணிமா லைமா
மைவாய் விழித்துணைக் கலைமக ளிரட்டைமணி
மாலை தமிழ் நீதிசார
மற்றுமுத லானபிர பந்தங்கள் செய்ததுவும்
வரிசைபெறு வாழ்வு முற்றேன்
வெவ்வாய் மழுப்படை யினன்சிவா கமமும்வண்
மேன்மைப் புரா ணங்களும்
விரிகதிர்ப் பரிதிமுன் றீயுமிழு மணிபோல்
விளங்கியடி யவர் வீடுறச்
செவ்வாய் மலர்ந்தருளு நின்னுடைய பரிகலச்
சேடங்கொண் மகிமை கண்டாய்
திகழ்ஞான சம்பந்த னேகமலை யதிபனே
சிவசமய குருரா யனே. 2

பொல்லாத காலமிக் காலமிக் காலமே
போலுமொழி விழிமா தர்தம்
போகமே கொண்டவம் போகமே தினியோர்கள்
புந்தியினி லைப்ப தல்லாற்
சல்லாப வருளினெறி சிறிதுமுண ராமலே
தந்திடுவ திந்த நாளிற்
சந்தத முத்திக் கொடிகட்டி யாள்கின்ற
சற்குரவன் யாவ னென்னிற்
கல்லார மாரமிவை யர்சமொடு வாவிகள்
கனுன்றதிரு வாரூரில் வாழ்
கருணையெனு ஞானப்ர காச தேசிகனைக்
கருத்தினு ளிருத்திய வனே
செல்லாதி வீடுதவு குரவர்குல திலகமாச்
செப்ப மொழிகுளிர வருள்வான்
றிகழ்ஞான சம்பந்த னேகமலை யதிபனே
சிவசமய குருரா யனே. 3

அகவிரு டிறந்திடவு மடியவர்க் குத்தீக்ஷை
யாகமப் படிபண் ணவு
மட்டமா சித்தியொடு மிந்திரா திபர்பதமு
மலவல் வெனத் தெளிந்தே

பிதுபா மிரண்டையு முணர்த்திடவு நிட்டையி
விருத்திடவு மிரக்ஷிக் கவும்
இருளென்று வெளியென்று பஞ்சபூ தங்களன்
றென்று சிவகதி காட்டவும்
பகர்வரிய சன்மார்க்க ஞானமோ க்ஷம்பெறும்
பான்மையை விரித் தோதவும்
பங்கயா சனனுமறி யாதகுடி லைப்பொருட்
பக்குவம் பார்த்த ருளவுஞ்
செகமீதி லிமசேது பரியந்த் மிகவுள்ள
தேசிக ருனைப் போல்வரோ
திகழ்ஞான சம்பந்த னேகமலை யதிபனே
சிவசமய குருரா யனே. 4

துய்யசெஞ் சடையாட வளர்மதி யாடத்
தொடர்ந்து பகுவாய் பிளந்து
சுடிகைகெட் டரவாட வான நதியாடத்
துலங்கு கட்டுணைக ளாடச்
சையகிகர் நாலுதோ ளாடக் கடுக்கையந்
தாராட வோடுக் கைத்
தளிராட வழலாட வொருகைதுடி யாடவுடை
தரும்புலித் தோலா டவே

வையமகிழ் முனிவர்கொண் டாடமுய லகன்முதுகில்
வைத்திரு பதந்தூக் கியே
மணமலிந் திடுபங்க யாசனன் பயிலநான்
மறைப்பரி புரங்க ளாடச்
செய்யபொன் னம்பலத் தாடிநீ யென்கொலோ
சிறியேனை யாள வந்தாய்
திகழ்ஞான சம்பந்த னேகமலை யதிபனே
சிவசமய குருரா யனே. 5

அண்டமத் தனையுமுன துள்ளத் தடக்கியே
யாறுறு தத்து வக்கா
டடங்கவே செய்துபின கண்டி தானந்தத்
தளப்பருஞ் சோதி மேனி
யெண்டனக் கரியதா முன்றிரு முடிப்பதக்
கெல்லை யிலையே லறுப்ப
தெங்ஙன் மேலிப்பிறப் பாயினு மொளியனா
லேத்தவெளி வந்தருளி னாய்
வெண்டமிழ் தனைக்கடிந் தேநல்ல செந்தமிழ்
வேண்டுபுல வோர்க்கு பலகை
வேண்டிக் கொடுத்திடத் தமிழ்மண மிலாதவனை
வீழ்த்துபொற் றாமரைக் கண்

தெண்டிரை யொதுக்குநித் திலமெலாங் கரையினிற்
சிதறவொளி தரும துறையிற்
றிகழ்ஞான சம்பந்தனே கமலை யதிபனே
சிவசமய குரு ராயனே. 6

என்னுருவ மின்னபடி தன்னுருவ மின்னபடி
யென்னுமுறை தன்னை யறிவித்
தின்னபய னென்றுமெ லென்னையடி மைகொண்
டிருட் கடல் கடத்தியருளே
மன்னுதன தன்பர்க ளுடன்பயில வைத்தருளில்
வைத்திருள் கெடுப்ப வதன்மேல்
வந்துவந் துறுவினைகள் வெந்துவெந் திடவொரு
மருந்துதந் தவனெவ னெனிற்
முன்னிய வரம்பைக் குருத்துப் பெருத்துத்
துலங்கிய மதிக்கு நடுவே
தோய்வது தெரிந்துசிறு பாலர்கள் கறங்கென்று
சொல்ல நெடுமாட மிசையே
தென்னச் சுழன்றிடுத லில்லாமை கண்டுகண்
சேர்கவிகை யென்ன நினையுந்
திகழ்ஞான சம்பந்த னேகமலை யதிபனே
சிவசமய குருரா யனே. 7

கல்லாத புல்லனைக் கும்பமுனி செந்தமிழ்க்
கடவுளே யென்று மென்றுங்
காசொன்று முதவா வுலுத்தனை மிகுகொடைக்
கற்பகமெனக் கழறியும்
பொல்லாத பொய்யனைப் புவிமீதில் வருதரும
புத்திர னெனப் புகன்றும்
பொய்யே பிதற்றியு தரத்தினை நிறைத்துவாழ்
புல்லர்போ லல்லன் யானே
யல்லாது சிறிதுமுப சாரமப சாரமிங்
கறைவுற்ற தல்ல விவ்வா
றறியார்கள் சிறியார்க ளறிவார்க ணெறிசே
ரருந்தவப் பெரியோர் களே
செல்லார் நெடும்புரிசை மணிமாட வீதிசூழ்
தென்றருமை வாழ நாளுந்
திகழ்ஞான சம்பந்த னேகமலை யதிபனே
சிவசமய குருரா யனே. 8

குருராயவட்டகம் முற்றிற்று.



உ

குருபாதந்துணை

திருத்தருமபுர ஆதீனத்துப் பிரதமஞானசாரிய

சுவாமிகளாகிய

ஸ்ரீமத் குருஞானசம்பந்த சுவாமிகள்மீது

திருநெல்வேலி அறச்சாலைமடம்

தமிழாகரமுனிவர் அருளிச்செய்த

# சந்திரகலாமாலை.



பகலவன் விரித்தகதிர் பாயபுவி யின்மீதுற்
பவித்துப் பினே தவித்துப்
பல்காலு முதாவன லவியாது நீதிமுறை
புராாது மூவா சையும்
அகலவிட வறியாமன் மரியாமனெஞ்சுபுண்
ணுகிய விவேகி யாகி
யடியுண்டு திரிவேற்கு னடியுண்டு தகையாற
லாமென்னு நினைவெய் துமோ

புகலரிய ருத்ராக்ஷ தாரணு சர்வாங்க
பூதியுத் தூள னுத
போதனர் செவிப்புலத் தூடமுத தாரையாய்ப்
புகுதவிடு பஞ்சா க்ஷரா
சகலகலை யுந்தேர்ந் தறிந்தடங் கியவிதய
சாதகர்க் குப்போ தகா
தருமபுர மகலாது தவமேற வளர்ஞான
சப்பந்த குருநா யனே. 1

பெறுவதுன் பக்கலொன் றுண்டுநின் பாதப்
பெருந்தீர்த்த மதிலா டவே
பெற்றனன் பிறவிவே ரற்றனன் கருணையாம்
பிரவாக வாவி மூழ்கி
மறுவருஞ் சற்புருட விருடிதுல் லியர்தமடி
வாழ்த்தக் கிடைத்ததினி யெவ்
வகையுமெளி யேனுக்கு வேண்டுவது முண்டென
மதிக்காத வணமுடித் தாய்
பறுவதங் கட்குநிலை தவறியசை வுறினுமம்
பரநெடுஞ் சேறு படினும்
பரிசுத்த சித்தநின் பதம்விட்டு நீங்காது
பாவிப் பவர்க்கா வியே

சறுவசங் கப்பரித்தி யாகஞ் செயுஞ்சாது
சங்கப்ர சங்க வானே
தருமபுர மகலாது தவமேற வளர்ஞான
சம்பந்த குரு ராயனே. 2

படைபெற்ற கைச்சுத்த வீரரெங் குஞ்செயம்
பண்ணுவா ரென்னு மதனிற்
பஞ்சாக்ஷ ரத்தையுரு வேற்றியே நீற்றிலே
பாலித்து வெற்றிகொள் வாய்
கடைகெட்ட ஜென்மப் பிணிக்களை டதங்கொண்டு
கண்டிதஞ் செய்பண் டிதர்
காணாத பேதைநான் ஞானபண் டிதசாமி
கைப்பிடித் துப்பார்ப் பையால்
நடைகற்று முடைகற்று நாகரீ கங்கற்று
நவில்கலைகள் பலகற்று மெய்ஞ்
ஞானவா னுமெனும் விஞ்ஞதத்தே சிகரெலாம்
நவிலுநின் வசன மொன்றிற்
றடைப்பட்டு நின்றுநெஞ் சுடைபடுவ ரலதுத்
தாஞ்சொல்ல வல்ல ருளரோ
தருமபுர மகலாது தவமேற வளர்ஞான
சம்பந்த குரு ராயனே. 3

இங்கற்ப ருடனுறவு பெற்றுநித் தியகரும
மீறுதி நடுவீறு செய்
திகபரந் தழுவாத வசனமெவ ரொடுமுறைத்
தெய்தும் வினைசெய்து பின்னும்
வெங்கற்ப காலமெரி வாய்நிரய நாப்பண்டு
வீழ்ந்துழலு மவதி தீர
வேண்டியென தாண்டவன் சன்னிதானத்தினடு
மேவினே னினியிரங் காய்
செங்கற்பொ னுகவருள் பெற்றசுந் தரமூர்த்தி
செந்தமிழ்ப் புலமை யப்பர்
சிரபுரச் செல்வரிவர் மூவர்தே வாரமுந்
திருவாய் மலர்ந்தோ துமச்
சங்கற்ப சித்தர்சூழ் தாமுனிவர்கு மூஉப்பிர
சங்கத் திருக்கு முதல்வா
தருமபுர மகலாது தவமேற வளர்ஞான
சம்பந்த குரு ராயனே. 4

நெஞ்சகத் தஞ்செழுத் துருவேற்று வோர்கள்சிலர்
நியமநிட்டா பரர்களாய்
நீள்சடா மகுடதார் சிலர்சிவார்ச் சனைவிதி
நிடேதமன் விடுபவர் சிலர்

பஞ்சல க்ஷணமுந் தெரிப்பவர்கள் சிலர்விரிப்
பவர்கள்சில ராகம மெலாம்
பார்ப்பவர்க டிருமுறைகள் சேர்ப்பவர்கள் சிவகதை
படிப்பவர்கள் சிலர்மலர் முகச்
செஞ்சொணு வாணர்சிலர் சாத்திரம் வினவுவோர்
சிலரிவர் குழாங் கூட்டமாய்ச்
செயசெயெனு முனதாசன் னிதியார வாரமித்
திக்கெட்டு மெட்ட வெளியேன்
சஞ்சல நிவாரணஞ் செய்தா சிருந்தசிவ
சமுகமகி மையையென் சொல்வேன்
தருமபுர மகலாது தவமேற வளர்ஞான
சம்பந்த குருரா யனே. 5

வாதிக்கு மலபந்த பாசத்து வக்குண்டு
மனதுமடி வுண்டு கண்ட
வாக்கெலா முபசார வசனமசனந் தரும
வகைக் கேற்றபழ மொழிகளே
போதித்த வர்மனது சோதித்து நித்தியம்
பொய்யுடல நித்திய மெனும்
புத்தியெள் ளளவுமுட லுள்ளளவு மின்றியே
பொன்றியே போவன் கோலோ

ஆதிக்க மிவ்வள விவர்க்கெனப் பிரமாதி
யாலுமறி தற்கரி யவா
ஆகமப் பரவைமுழு நீர்பருகு மேகமே
யட்டாங்க யோக மேவிச்
சாதிக்கு முதியர்வினை சேதிக்கு முதல்வநின்
றன்பெருமை தானறிவை யோ
சருமபுர மகலாது தவமேற வளர்ஞான
சம்பந்த குரு ராயனே. 6

நிட்டையி லிருப்பவர் சிவஞான பூரணர்
நிரந்தரஞ் சரிதை புரிவோர்
நிகரில்கிரி யாமார்க்க நேர்நடப் பவருலக
நீதியென வோதுவ தெலாம்
விட்டுநிகழ் தன்னையுந் தலைவனையு மோர்ந்தவன்
வேந்தரி வர்சூழ்ந்து வாநீ
மேதகு சிவானுக்ர காதிபதி யாய்ஞான
வீதியில் வாப் பெற்றவனே
சிட்டர்பரி பாகமே துட்டர்பரி தாகமே
திருவருட் சூழ் மேகமே
திருவுளத் திதமிக்க நடவார்க ளளவற்ற
சென்மகன் மக்கட் டிலே

தட்டழிய விட்டொழிய விட்டழிவி லாதசிவ
சாயுச்ய மெய்த வருள்வாய்
தருமபுர மகலாது தவமேற வளர்ஞான
சம்பந்த குரு ராயனே. 7

கண்ணார வுனதுமுக கமலமுங் கருணை
கடாக்ஷவீ க்ஷணமு நகையுங்
கனகொத்து ருத்ராக்ஷ தாரண மார்புமிடை
கட்டு செம்பட்டி னுடையும்
விண்ணுடர் களிகூரு மாசானு பாகுவும்
விபூதிப்ர சாத நுதலும்
மெய்யழகு மம்மம்ம கண்டவர்வி யப்பர்சிவம்
வேறுநீ வேறின் மையாற்
பண்ணார் சுவைத்தமிழும் வடகலையு மளவிடு
பவர்க்கெலா முறை யாணியே
பாணியில் விபூதியோ ரேணுவுந் தவிப்பெரும்
பாவநா சஞ்செய் பொருளே
தண்ணீர் புனற்கா விரிக்கோட்டு நறியமலர்
தாங்குநந் தனவனஞ் சூழ்
தருமபுர மகலாது தவமேற வளர்ஞான
சம்பந்த குருரா யனே. 8

கழுவாத மணியேகு ணதிசய வஸ்துவே
கருணைக டாக்ஷ நிதியே
கன்மகா ளிதமறுத் திடுமிரத குளிகையே
கதியுதவு சஞ்சீவியே
வழுவாது காதலிப் பவர்தய நிறைகலை
மதிக்கொழுந் தேசெழுந் தேன்
வடியிட்ட பாகமே மதுரிதக வித்துவர்தம்
வர்க்கமே யென்றென் றுகை
தொழுவார்க டோத்திரஞ் செய்வார்க ணறியமலர்
சொரிவார்க ளினதா லயஞ்
சூழ்வார்க ளிணையடியில் வீழ்வார்கள் பலகோடி
தொண்டரிவர் செயலி லொன்றுந்
தழுவாத சிந்தையு நிந்தையு மகந்தையுஞ்
சார்போத னென் பெறுவனோ
தருமபுர மகலாது தவமேற வள்ஞான
சம்பந்த குருராயனே. 9

எவரேனு மெங்கேனு மேதேனு நின்புகழி
லேதொன் றெடுத் துரைக்கில்
எழுபார்க்கு மதிபதியு மாகிசிம் மாசன
திபதியென வாசிருப் பார்

புலிராசர் முடியுஞ்ச டாமகுடர் முடியும்
பொருந்திட வருந்தி வந்துன்
பொன்னடி வணங்கியவர் பின்னடி பெயர்த்துமே
போகாம னின்றுன் னையே
நவகோடி சித்தனே விலையிலா மணியேயெ
னயனம ணியேயென் னவிண்
ணுடிமே லதிசய மெனக்கைகொட் டிடநீபுன்
னகைசெய்து வீற்றிருப் பாய்
தவராசர் பிரியாத சிவராச தானியுன்
சன்னிதா னமுமல் லவோ
தருமபுர மகலாது தவமேற மளர்ஞான
சம்பந்த குருநா யனே. 10

கனகாரி யத்துமந் தரமத்து வாசுகிக்
கயிறுகொடு தேவ ரமுதங்
கடைந்தநா ணின்சரண கதியென் றடைந்திடக்
கடுவுண்டு புகழ்கொண் டனை
சொன்காவ லர்க்குமுனம் வாசகன் பரிவிலைத்
தொகுதியை வரப்பெற் றனை
சுந்தரன் றூதுபோய் வந்தனையு வந்தனை
தொழும்புதந் தெனையாள் வையே

பனகாதி பார்க்கும் புலிப்பா தனுக்கும்
பரிந்தூந டனம்புரிந் தாய்
பலகலையு மெவ்வகையு மெவ்வுயி ரையும்புரப்
பதுசகச வித்தைநின் பாற்
சனகாதி யர்க்கன்று வடவாலி னீழலிற்
றணித்தனுக் கிரகித் தவா
தருமபுர மகலாது தவமேற வளர்ஞான
சம்பந்த குரு ராயனே. 11

நஞ்சமன விழியிணையின் மருளருட் பார்வையால்
நாவிடத் துகளு முத்த
நகையினுன் முலைமுளரி முகையினுன் மடவியர்
நடத்து மாயா மயக்கிற்
பஞ்சபா தகமிஞ்ச வஞ்சாது செய்துபய
பத்திநித் தியமு மின்றி
பன்றிபோ லெங்கணுஞ் சென்றுகண் டனதின்று
பரிசழிந் துழலு மென்பால்
அஞ்சலென நினதன்ப ருனதுதிரு வருண்மகிமை
யத்தனையு மெத்தென வுரைத்
தறிவுறுத் தக்கேட்ட வன்றுதொட் டின்றுவரை
யாசைமீ சுரமா கவே

தஞ்சமென வுனையடைந் தேனுதலாலெற்கு
சற்றேயி ரங்கியருள் வாய்
தருமபுர மகலாது தவமேற வளர்ஞான
சம்பந்த குரு ராயனே. 12

காயாம ரத்தினிற் றோன்றுத காயையுங்
கனியாக்கி யினிய சாறு
கக்கப் பிழிந்தெடுக் கத்தக்க வித்தையுன்
கையிலுண் டுன்மடத் தி
ஞயாக்க டைத்தலையின் மவுனியா யசையாமல்
நானிருக் கக்கிடைத் தால்
நச்சுவது முப்பத்து முக்கோடி தேவரும்
நாணீத்த சேடமா மால்
சேயாக வுலகின்மன் பதையெலா முய்யும்வகை
திருவுருக் கொண்டு நாளுந்
திவசகான் முளரியிற் பரிபக்கு வப்படுத்
திப்பார்த் திருந்து பெற்ற
தாயாக வந்தநின் பொன்னடிச் சார்ந்தவர்
தாம்பெற்ற பேறென் கொலோ
தருமபுர மகலாது தவமேற வளர்ஞான
சம்பந்த குரு ராயனே 13

என்னதிது யானென்னு மிருவாசனையுமொழிந்
திடவில்லை வாக்கு மனதுக்
கெட்டாத தொன்றினுந் தட்டாத தென்றபொருள்
யாதென்ன வினவ வில்லை
பன்னிதிய மீதாசை நிற்கவிலை யுனதுபேர்
பசுபதி யெனக்கேட் டுமோ
பார்க்கவிலை யச்சொலின் பொருளுரைத் தும்பவப்
பாழ்ங்கிணறு தூர்க்க வில்லை
சென்னிதின மொன்றிலொரு கணம்வணங் குவதிலைச்
செவியிலுன் சொற்பு கவிலை
சிற்பரா வென்னவாய் சொன்னதிலை யித்திறந்
திறம்பாத யானு முனது
சன்னிதியில் வந்துதரி சிக்கக் கிடைத்ததெத்
தவமகிமை யோவறி கிலேன்
தருமபுர மகலாது தவமேற வளர்ஞான
சம்பந்த குரு ராயனே. 14

காரணம தன்பின்வரு காரியமி ரண்டினுல
கவருயிர்பு ரப்ப தறியுங்
காட்சியிற் கிளிகுயில ராச்சகோ ரம்பூவை
காரெலியி தற்குமு தலாப்

பூரணக டாக்ஷம்வைத் திருவினைச் சிகரப்
பொருப்பைநீர்த் தூளாக்கி யெப்
போதுமழி யாதபே ரின்பத்தி ருத்துமுன்
போதனு சத்தி யெளிதோ
பேரணங் கிடநாடு நடராஜ மூர்த்தமே
பிரிதி விம்பீ கரித்துப்
பெரியோ னெனச் சொல்லவந்தகா ரணன்பெற்ற
பேறொருவர் பெறுவார் களோ
தாரணிபெறக் கடவ தென்றுமே நீங்காத
சைதன்ய பரம குருவே
தரும்புர மகலாது தவமேற வளர்ஞான
சம்பந்த குரு ராயனே. 15

கைலாசர் திருவருட் பெறுநந்தி யவர்பதங்
காண்சனற் குமரர் தாளைக்
கண்டசத் தியஞான தரிசனி பரஞ்சோதி
காட்டு மெய்கண்ட தேவர்
கைலாரு மருணந்தி மறைஞான சம்பந்தர்
கழல் பரவுமா பதியர்பின்
காணவரு மருண்மச்சு செட்டியார் கங்கைமெய்
கண்டரொரு காற்பழு கையாற்

சைலவர்க ளுஞ்சொலுஞ் சிற்றம்ப லவர்கழல்
சாருஞா னப்ர காசர்
தாங்கிவளர் கமலைஞா னப்ரகா சப்பெரியர்
தாம்பரம் பரையில் வந்த
சைலகுரு ராசனீ யென்றுசொல வீற்றிருந்
தானை யென்றுரைப்பர் பலரே
தருமபுர மகலாது தவமேற வளர்ஞான
சம்பந்த குரு ராயனே. 16

சந்திரகலாமாலை முற்றிற்று-



The Imperial Printing Works, 23, Davidson St., Madras.